*Nam nāṭu*

*Malar 3, itaḻ 282*

*May 11, 1956*

Record no. 1131

REGD. No. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ இலங்கையில் 10 சதம் ★

# நம் நாடு

தி.மு.க.தின இதழ் ஆசிரியர் இரா.நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The official organ of the D.P.F.

மலர் 3] சென்னை: சித்திரை 29உ வெள்ளி (11—5—56) ★ ★ வெளியூர் : சித்திரை 30உ சனி (12—5—56) [இதழ் 2

## வயிறு வலிக்காமல் என் செய்

தெஹரான், மே 10—

24 நகம் வெட்டும் கத்திரிகள், 12 பெரிய பேனு கத்திகள், 19
4 பெரிய கத்திகள், 13 உடைந்த கண்ணுடித் துண்டுகள், 2 க
உலோகச் சங்கிலித் துண்டுகள், 2 செருப்பு ஆணிகள், 2 க
காரச் சங்கிலிகள், 2 திருகாணிகள், 1 மெல்லிய உலோகக் கம்
1 தேயிலைக் கரண்டி—இத்தனையும் ஒருவரின் வயிற்றுக்குள் இ
தது என்றுல், ஆச்சரியம்தானே! இத்தனை பொருள்களும் தி
பிய அந்த வயிறு வலிக்காமல் என்ன செய்யும்?

(4-ம் பக்கம் பார்க்க)

# 'ஆரிய இன வெறியே திராவிட இன உணர்வைத் தூண்டிற்று'

## போலி விலகல் கடிதத்தின் வரலாறு

### கழகத் தோழர்களுக்கு ஈ.வெ.கி. சம்பத் வேண்டுகோள்

ஈரோட்டிலிருந்து வெளிவரும் திராவிடர் கழக வாரப் பத்திரிகை ஒன்றில், 'என் கடிதம்' என்ற தன்மையில் பிரசுரிக்கப்பட்டிருந்த ஒரு செய்தி சம்மந்தமாக ஈரோடு சென்று விசாரித்ததில், கீழ்க்கண்ட தகவல்கள் கிடைத்தன; அதைத் தோழர்களனைவருக்கும் அறிவிப்பது எனது கடமை என்ற முறையில் இதனைத் தெரிவிக்கிறேன் :—

"என்னிடம் சில மாதங்களுக்கு முன்புவரை காரியதரிசியாகப் பணிபுரிந்து வந்த திரு. வேதநாயகம் என்பவர், சில நம்பிக்கை மோசடியான காரியங்களில் ஈடுபட்டதன் விளைவாகவே அந்தச் செய்தி வெளிவந்துள்ளது. நான் சிறை செல்லும் நேரத்தில், வீட்டு நடைமுறைகளுக்கென, எனது பெயர் அச்சிடப்பட்ட 'லெட்டர் பேட்' தாள்கள் சிலவற்றில், வெற்றுத் தாள்களில் கையொப்பமிட்டு அவரிடம் அளித்தவற்றில் இரண்டு மூன்று கையொப்பமிட்ட தாள்களைத் தன் வசமே வைத்திருந்திருக்கிறார். வேலையிலிருந்து அவரை விலக்கும்போது சுமார் நூற்றைம்பது ரூபாய் வரை அவர் கையாடி, இருந்தது கண்டுபிடிக்கப்பட்டது. இருப்பினும், ஏறத்தாழ ஐந்து ஆண்டுகள் எங்கள் குடும்பத்தில் பணியாற்றியவர் என்ற தன்மையில், வேலையைவிட்டு விலக்கியதைத் தவிர வேறெந்த நடவடிக்கையும் மேற்கொள்ளப்படவில்லை. இருந்தும், அவர் எனது கையொப்பமிட்ட வெற்றுத் தாள்களில் விவகாரத்துக்குரிய அந்த ஆபாசச் செய்தியை அவர் கைப்படவே எழுதி நிரப்பி, ஈரோட்டுப் பத்திரிகைக்குத் தந்திருக்கிறார்.

"பத்திரிகை ஆசிரியருக்கு எனது கையெழுத்தும், அவரது சிறிய தந்தையின் புதல்வர் திரு. வேதநாயகத்தின் எழுத்தும் மிக நன்றாகப் பரிச்சயம் உண்டு. தற்சமயம் அவர் என்னிடம் வேலையில் இல்லை என்பதும் அவருக்குத் தெரியும். இருந்தும், என்னைக் கலந்து கொள்ளாமல் அதை வெளியிட்டது, பத்திரிகைத் தொழிலுக்கே இழிவு தரக்கூடியதாகும்.

"இது சம்மந்தமாக நமது தோழர்களில் சிலர் பரபரப்படைந்து, கவலை அடைந்ததறியப் பெரிதும் வருந்துகிறேன். இது போன்ற செய்திகள், மறுப்பு வரும் மறுநாள் வரைதான் உயிரோடு உலவும் தன்மை படைத்தவையாகும்.

"நமது மாநில மாநாடு மிகச் சீரும் சிறப்புமாய் நடைபெற இருக்கும் இவ்வேளையில், இதுபோன்ற 'வேத்துவேட்டு'கள் பல, மாற்றார் முகாமிலிருந்து பலவகைகளிலும் வெளிவரக்கூடும் என்பதை எதிர் பார்த்தே நாம் இருத்தல் வேண்டும்.

"மற்றபடி, இத்தகைய செய்திகளுக்கு 'தர'த்துக்கு அதிகமான மதிப்பளித்துக் கலவரப்படுவது நமது தன்மைக்கு இழுக்கைத் தரவல்லது என்பதை உணர்ந்து, அலட்சியப் படுத்துவோமாக!"

அன்பன்
ஈ. வெ. கி. சம்பத்
10—5—56

## 'உணர்வுபூர்வ ஒருமைப்பாடில்லாது அரசியல் ஒற்றுமை உயிர் வாழாது'

### 'தென்னுட்டின் நிலை திருப்திகரமாக இல்லை'

பம்பாய் வானொலி விவாத விவரம்

பம்பாய், மே 10—

"பத்தொன்பதாவது நூற்றுண்டுக்குமுன் தென்னிந்தியாவில் இன உணர்வு இல்லாதிருந்தது.

"மத புத்துயிர் எழுச்சியின்போது, கிருத்துவ மதவளர்ச்சியைத் தடுக்கும் ஆர்வத்தில், தலைவர்களும் சீர்திருத்தக்காரர்களும், (வடமொழி) வேதங்களை உலக மத நூற்களில் மிக உயர்ந்த நூல் எனவும், சிறந்தது ஆரிய இனம் எனவும் பிரகடனப்படுத்தினர்.

"இப்பிரகடனத்தின் விளைவாக, ஆரிய இனத்தின் தனிப் பெரும் உணர்வு, வடநாட்டினர் உள்ளங்களைப் பற்றிக் கொண்டது.

"அவ்வுணர்வின் எதிர்மறை நிகழ்ச்சி தென்னுட்டில் தலை காட்டத் தொடங்கியது"

இவ்வாறு, பம்பாய் வானொலியிலிருந்து இராமதாரி சின்ஹ என்பவர் குறிப்பிட்டுள்ளார்.

"தென்னுட்டில் ஒரு இரண்டாவது தலைநகரை ஏற்படுத்துவது' வடக்கையும்—தெற்கையும் மேலும் நெருங்கிவர உதவக்கூடும்.

"இந்தியாவின் ஐக்கியத்தை உருவாக்கும் சக்தியாக முற் காலத்தில் மதம் இருந்திருக்கிறது. புராணங்கள், மக்களை நெருங்கி வரச் செய்திருக்கின்றன."

—இவற்றை, மேற்கு வங்க மேல் சட்டசபை தலைவராகவும், ஆட்சி மொழிக்குழுவின் உறுப்பினராகவும் உள்ள டாக்டர் சுனுதிகுமார் சாட்டர்ஜி, அதே வானொலியிலிருந்து கூறியுள்ளார்.

பம்பாய் அகிலஇந்திய வானொலி நிலையத்தில் 'உணர்வு பூர்வமாக இந்திய இணைப்பு' என்ற பொருள் பற்றி விவாதம் நிகழ்ந்திருக்கிறது. அவ்விவாதத்தில் டாக்டர் சாட்டர்ஜி, பாலகிருஷ்ண சர்மா, டாக்டர் அசாரி பிரசாத் துய்வேதி, இராமதாரி சின்ஹ, சத்தியநாராயணு முதலியவர்கள் பங்கு கொண்டு இருக்கின்றனர்.

"இந்தியக் கலாச்சாரம் மிகுதியும் ஆரிய மயமாகும் எனக் கருதுவது தவறுடையதாகும். அக்கலாச்சாரத்தில், திராவிடர்களுக்கும் பெருமைப்படத்தக்க பங்கு உண்டு.

"தகுந்த கல்வியும், வடநாட்டினர் தென்னுட்டிற்குச் சென்று வருவதும், அதே போன்று வடநாட்டிற்குத் தென்னுட்டினர் வந்துபோவதும், தென்னுட்டில் (இந்திய) தேசிய உணர்வை உருவாக்கக்கூடும்."

இவ்வாறு, டாக்டர் அசாரி பிரசாத் துய்வேதி கூறினர்.

விவாதத்தில் கலந்துகொண்ட சத்தியநாராயணு கூறியதாவது:—

"எந்த ஒரு மாகாணமோ, சமூகமோ, 'தனது நல்லியல்பையும், கவர்ச்சிகரமான தனித்தன்மையையும்' எவ்வகையிலும் கைவிட்டு விடாமலே, உண்மையான தேசிய உணர்வுடன், இருப்பது சாத்தியமே. பெரிய ஆற்றில் கலந்துவிடும் சிறிய ஆறும் அனைவிட்டுத் தேக்கப் படும் பொழுது, பெரும் நிலப் பரப்பின் பாசனத்திற்குப் பயன் படும் அளவில் பெரும் நீர் நிலையாக உருக்கொள்வதுபோல் பல்வேறுபட்ட மாகாணக் கலாச்சாரங்களும் ஒன்றுபட்டு, நாட்டின் முழுமைக்கும் இன்பம்

(4-ம் பக்கம் பார்க்க)

## பர்மாவிலும் இலங்கை போல்தானு?

### இந்தியருக்கு 'நாடற்ற நிலை' அங்கும் வருமா?

### 6 இலட்சத்தில் 3 ஆயிரம் பேருக்கு மட்டுமே குடியுரிமை?

சந்தேகமும் விளக்கமும்

புதுடில்லி, மே 10—

இலங்கையைப் போலவே பர்மாவில் குடியேறி வாழும் இந்தியர்களுக்கு 'நாடற்றவர்கள்' என்ற நிலை வந்துவிடுமோ என்ற அச்சம் இப்போது தலைதூக்கியிருக்கிறது.

'அப்படி ஒரு நிலைமை வராது' என்று இந்தியப் பிரதமர் நேரு அபயமளித்திருக்கிருர்

பர்மாவில், 10,725 இந்தியர்கள் பர்மியக் குடிஉரிமை கோரியதாக பர்மா சர்க்கார் தெரிவிப்பதாகவும், இந்தியத் தூதவரோ சுமார் 40-ஆயிரம் பேர்வரை குடியுரிமை கோரியிருப்பதாக மதிப்பிடுவதாகவும் வெளிவிவகார பார்லிமெண்டரி செயலாளர் திருமதி லட்சுமி மேனன் மாநிலங்கள் சபையில் கேள்வி ஒன்றுக்குப் பதிலளிக்கும் போது தெரிவித்திருக்கிருர்.

"பர்மாவில் 6 இலட்சம் இந்தியர்கள் வாழுகின்றனர்; ஆனுல், 3,000 பேருக்கு மட்டுமே இதுவரை குடியுரிமை வழங்கப்பட்டிருக்கிறது என்பதால், இலங்கையைப் போல, பர்மாவிலும் 'நாடற்றவர்கள்' என்ற நிலை எழுமா?"

என்று, கிஷன்சந்த் என்ற உறுப்பினர் கேட்டபோது, பிரதமர் நேரு சொன்னதாவது:—

'அப்படி நிலை ஏற்படுமென நான் எண்ணவில்லை. 'நாடற்றவர்' என்ற பிரச்சினையே அங்கு இல்லை; அங்கு இந்தியக் குடிமக்கள் அல்லது பர்மியக் குடிமக்கள் என்ற இரு சாரார்தான் வாழ்கிருர்கள்; எனவே, இலங்கை நிலையை இதோடு ஒப்பிட்டு உறுப்பினர் பேசத் தேவை இல்லை; இலங்கைக் கதையே வேறு."

பர்மாவில் குடிஉரிமை வழங்கப்படும் நிலை குறித்து இதற்கு முன்னர் திருமதி லட்சுமி மேனன் விளக்கம் தந்திருக்கிருர்.

## மாநில மாநாடு : மறவர் பாசறை!

(தில்லை-வில்லாளன்—நமது விசேட நிருபர்)

திருச்சி, மே 10—

"வள்ளுவர் நகரில் இன்று மாநாட்டுப் பிரதிநிதிகள் தங்கும் கொட்டகை அமைக்கப்பட்டுள்ளது. ஓவியக் கண்காட்சிக்கான கொட்டகையும் அமைக்கப்படவிருக்கிறது. புத்தர் மண்டபமும், வள்ளுவர் மண்டபமும் அமைக்கிருர்கள், ஓவியர்கள்! ஓவியக் கண்காட்சிக்குத் தேவையான கார்ட்டூன்கள், 'கட்அவுட்'கள் ஏறத்தாழ முடிந்துவிட்டன. சென்னையிலிருந்து மாணவர் கிளையின் அமைப்பாளர் டி. கே. பொன்னுவேல் அவர்கள் தலைமையில் விஞ்ஞானப் பரிசோதனைச் சாலையொன்று அமைக்க ஏற்பாடாகியிருக்கிறது. இன்னும் இருங்களூர் பயிற்சிப் பள்ளி சார்பில், ஏராளமான உலகப் படங்களும், நாட்டு விளக்கப் படங்களும் வைக்க ஏற்பாடாகியிருக்கிறது. தோழர் இளமுருகு முயற்சியினுல், சென்னை மீன் இலாகாவைச் சேர்ந்த விசித்திர மீன்கள் காட்சியும் இருக்க ஏற்பாடாகியிருக்கிறது.

மதுரையிலிருந்து வந்துள்ள தொண்டர்கள், மாநாட்டுப் பந்தல் அலங்கார வேலைகளில் ஈடு

(4-ம் பக்கம் பார்க்க)

# எழுநிலை மாடம் நம்முன் ஏனே சரிந்தது?

நம் நாடு
...கழகத்தின் இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்
...னி 11—5—'56 வெள்ளி

# ...டுபட! மார்க்கம் காண்போம்!

...ந்தியத் துணைக் கண்டத் ... இரண்டு பெரும் இன மக் ... இருந்து வருகின்றனர். வடக்கே வதிபவர் ஆரிய மர ...னர் எனவும், தெற்கே உறை ...வர் திராவிட இனத்தவர் என ...ம் ஒப்புக்கொள்ளப்பட்டுள் ...னர்.

முற்கால வரலாற்றின் ஒப்பு ...தல், மறுக்க முடியாத ஒன்று. இக்காலத்தும் இந்த உண்மை முழுதும் மறுக்க முடியாத ஒன் ...க இருந்தபோதிலும்கூட, இன்று அதிகமான மக்கள் இங்குக் குடியேறி வாழ்வதைச் சான்றாகக் காட்டி, மறுக்க முயலுகின்றனர் சில விதண்டா வாதிகள்.

வாழ்க்கைத் துறை ஒவ்வொன்றிலும் வடக்கிற்கும் தெற்கிற்கும் இருந்துவரும் அடிப்படை வேறுபாட்டை அவர்கள் ஊன்றி கவனிக்க வேண்டும். அப்பொழுதுதான் வடக்கின் வழியிலும், தெற்கின் பாதையிலும் கணிசமான முரண்பாடு இருப்பதை உணர்ந்துகொள்வது அவர்க ...ளுக்குச் சாத்தியமாகும்.

உண்ணும் உணவிலும், உடுத்தும் உடையிலும், பேசும் மொழியிலும், பழகும் முறை ...யிலும், எண்ணும் நினைப்பிலும், இறை வழிபாட்டிலும், வடக்கிற்கும் தெற்கிற்கும், மலைக்கும் மடுவிற்கும் உள்ள வேற்றுமை உண்டு.

வடநாட்டில் குடியேறி வாழ்ந்தாலும், வடநாட்டைத் தாயகமாகக் கொள்ளும் திராவிடர் இருக்கவில்லை. அது போன்றே, திராவிடத்தைச் சுரண்டுவதில் ஆர்வம் காட்டும் அளவிற்கு, இங்கு வந்துள்ள வடநாட்டினர், இப்பகுதியைத் தங்கள் தாயகமாகக் கொள்ள ஆர்வம் காட்டுவதில்லை.

அங்கு செல்லும் திராவிடத்தாரும், அங்கு பிறந்து வாழும் மக்களை சுற்றத்தாராகக் கொண்டு, மனங் கலந்து உறவு கொண்டாடுவது கிடையாது. இங்குக்கிடைத்ததைச் சுருட்ட வரும் வடநாட்டாரும், இங்குள்ளாரை உறவினர்களாக ஏற்று, இருதயப்பூர்வமாகப் பழகுவது அறவே கிடையாது.

வடக்கே இருந்தாலும் திராவிடத்தார் திராவிடத் தோன்றல்களாகவும், தெற்கே ஆதிக்கம் செலுத்தி வந்தாலும் வடநாட்டார் வடநாட்டு மக்களாகவுமே, தங்களைக் கருதுகின்றனர். அந்த வேற்றுமையை ...பெறச் செய்யும் வகையிலேயே, இரு சாராரும் குடிபுகுந்த பகுதிகளில் செயல்பட்டு வருகின்றனர்.

வடநாட்டில் வழங்கும் மொழிகள் பலவும் வடமொழி என வழங்கப்பெறும் சவமொழியாம் சமஸ்கிருத மொழியை மூலமொழியாகக் கொண்டு விளங்குவதிலும், திராவிடத்தில் வழங்கும் மொழிகள் அனைத்தும கனனித் தமிழின் கிளை மொழிகளெனக் கொள்ளப்பட்டு, திராவிட இனமொழிகள் என வழங்கப்படுவதிலும், உள்ள அடிப்படை உண்மை சிந்திக்கத் தக்கது.

ஆரிய இனத்தையும், திராவிட இனத்தையும் நிரந்தரமாகப் பிரித்து வைத்திருக்கும் இந்த அடிப்படை வேற்றுமைகள், நீராவியின் ஆற்றல் அறியப்பட்டதினாலும், மின்சாரத்தின் சக்தி தெரியப்பட்டதினாலும், அணுவின் ஆற்றல் உணரப்பட்டதினாலும், மறைந்துவிடவுமில்லை—ஒழிந்துவிடவுமில்லை.

ஆவியாக மாறினாலும், கார் முகிலாகக் காட்சி தந்தாலும், ஆலங்கட்டிகளாகத் தரையில் விழுந்தாலும் அவை மூன்றில் உள்ளடக்கமும் நீராகவே இருப்பதுபோல், தோற்றத்தில் சிற்சில மாற்றங்கள் காணப்பட்டபோதிலும், அடிப்படையில்—மூலத்தில் ஆரியம் வேறு, திராவிடம் வேறு என்பதையே, வடநாட்டினரும் - தென்னாட்டினரும் செயல் மூலம் மெய்ப்பித்தே வருகின்றனர்.

ஆரிய இராமாயண, பாரதத் தாக்குதலினால், திராவிடத்தன்மையின் உருவம் பழுதாக்கப்பட்டிருக்கின்றதேயல்லாது, திராவிடத்தின் உயிர் நசித்துப் போகவில்லை. ஆரிய கலாச்சாரத்தின் மோதுதல், திராவிடத்தின் அங்கத்தை பின்னப்படுத்துவதில் வெற்றி கண்டிருக்கின்றதே ஒழிய, திராவிடப் பண்பை அடியோடு அழித்து வருவதில் வெற்றி பெறவில்லை.

திராவிடம், காலக் கோளாறால் ஏற்படும் தாக்குதலையும் எதிர்த்து நின்று வெற்றி கண்டு இருக்கிறது. கலாச்சாரப் படையெடுப்புகளையும் முறியடித்து, தனித்து நின்று காட்சி அளிக்கிறது.

இருநூறு ஆண்டுக் கால பிரிட்டிஷ் ஏகாதிபத்திய ஆட்சியில் வடநாடும் - திராவிடமும் பிணைத்து முடிபோடப்பட்டிருந்தும்கூட, ஆரியத்தின் கொடிய தீவாய்க்கு பலியாகிவிடவில்லை திராவிடப் பண்பு. ஒரே ஆட்சியில் அடைக்கப்பட்டிருந்தும்கூட திராவிடத்தின் செம்மையை, ஆரியக் கயமையால் சிதைத்துவிட முடியவில்லை.

இருநூறு ஆண்டு ஆட்சிக் காலததில் வெற்றிகரமாக நிறைவேற்ற முடியாத ஒன்றை, திராவிடப் பண்பாட்டை நிர்மூலமாக்கும் ஒரு கயமைச் செயலை, இந்தியப் பேரரசின் பெருந்துணைகொண்டு காஷ்மீர் பண்டிதர் ஆயுட்காலத்திற்குள் வெற்றிகரமாக முடித்துவிடலாம் என, காட்டுகுணம் படைத்த ஆரியம் அங்கலாய்த்துக்கொண்டு இருக்கிறது.

வடக்கை நாம் மட்டுமே வெறுக்கிறோம் — வடக்கின் ஆதிக்கத்தை நாம் மட்டுமே ஏற்க மறுக்கிறோம்—வடக்கின் பிடியிலிருந்து நாம் மட்டுமே விடுபட விழைகிறோம் எனத் தவறாக எண்ணிக்கிடப்பவர்களுக்கு ஒரு உண்மையைக் கூற விரும்புகிறோம். அதாவது, சக்ரவர்த்தி இராசகோபாலாச்சாரியார்—அழிந்துவரும் ஆரியத்தின் இறுதித் தூதுவர்—ஆரிய கலாச்சாரத்தின் கடைசி பாதுகாவலர் என்பதை நாம் சொல்லாமலே அனைவரும் அறிந்தே இருக்கின்றனர்.

அவருக்கும் நமது திராவிடத்தின்மீது வடநாடு அரசியல் துறையில் ஆதிக்கம் செலுத்துவது பிடிக்கவில்லை. அவ்வடிமை நிலையை விஷமென வெறுக்கிறார். அந்த அடிமைத் தளையை அறுத்தெறிந்து விடுபட விழைகிறார்.

தமதுவெறுப்பை,எதிர்ப்பை, விடுபடும்கருத்தை ஆச்சாரியார் தம் உள்ளத்திற்குள்ளாக மூடி வைத்திருக்கவில்லை. வெளிப்படையாகவே, வெறும் ஆச்சாரியார் ஆன பின்னர் கூறாது, முதல் கவர்னர்-ஜெனரலாக இருக்கும் நிலையிலேயே சோகத்துடன் - ஆனால் - துணிந்து கூறியிருக்கிறார்.

"இந்தியப் பேரரசு போன்ற ஆட்சி அமைப்பு முறையில், ஜனாதிபதியும், பிரதமரும் இந்தி மொழி பேசும் மாகாணத் (வடநாடு)தவராகவன்றோ வந்துவிடுவர்? இத்தகு ஆட்சி முறை ஒருக்காலும் செயல்படாது" என்ற மகத்தான உண்மையை, இந்திய அரசியல் அமைப்பைத் தீட்டிய டாக்டர் அம்பேத்காரிடம், திட்டவட்டமாகக் கூறியிருக்கிறார்.

ஆச்சாரியார், ஆரியத்தின் இறுதித் தூதுவர்! அவருக்கே பிடிக்கவில்லை—நிரந்தரமாக என்றென்றைக்கும் திராவிடத்தின்மீது வடநாடு ஆதிக்கம் செலுத்துவது! அது நடவாது என்கிறார், ஆச்சாரியார்!

அவருக்கே அந்த எண்ணம் இருக்கும்பொழுது, திராவிடத்தில் தனி ஆட்சியைக் காண விரும்பும் நம்மால், எவ்வாறு வடநாட்டுக்கு திராவிடம் அடிமையாகிக் கிடப்பதைத் தாங்கிக்கொள்ள முடியும்? முக்காலும் முடியாது.

அம்முடிவை மீண்டும் வலியுறுத்த, முடிவை வெற்றிகரமாக நிறைவேற்ற, வழிவகை காண, நம் அனைவரையும், திருச்சி அழைக்கிறது. அவ்வழைப்பில் அன்பு தவழ்கிறது, ஆர்வம் துள்ளுகிறது; கவர்ச்சி கொப்பளிக்கிறது, உரிமை முழக்கமிடுகிறது!

திராவிடம் விடுபட, வழிவகை காண, புத்துயிர் பெற்று செயல்பட, திருச்சிக்கு விரைந்து வாரீர், நாம் அனைவரும் ஒன்றுபட்டு செல்வோம்!

## காஷ்மீர் விவகாரம்

### விவாதிப்பதற்கு பாக்தாத் கவுன்சில் அருகதை பெற்றதல்ல

"காஷ்மீர் இந்தியாவின் ஓர் பகுதி இந்தியாவைப்பற்றியோ அதனின் மாநில உரிமைகளைப் பற்றியோ விவாதிக்க பாக்தாத் கவுன்சிலுக்கு அருகதையில்லை" என்று, வெளிவிவகார இலாகா பாராளுமன்றச் செயலாளர் சதத் அலி மக்கள் சபையில் தெரிவித்திருக்கிறார்.

காஷ்மீர் பிரச்சினையை ஐ. நா.-வில் எழுப்பப்போவதாக பாகிஸ்தானிடமிருந்து இந்தியாவுக்கு இதுவரையில் எந்தத் தகவலும் இல்லை என்றும், பத்திரிகையில் வெளியானதுதான் அரசினருக்குத் தெரியும் என்றும் அவர் கூறியுள்ளார்.

# சட்ட, நிர்வாகத் துறைச் சொற்கள்

## ஆங்கிலத்திற்குப் பதில் இந்தியில் சேகரிக்கக் குழு

### இந்தி வெறியர் தாண்டன் தலைமையில் நியமனம்

புதுடில்லி, மே 9—

சட்டசபைகளும், மக்கள் சபையும் அவற்றின் அலுவலகங்களும் உபயோகிக்கக்கூடிய பார்லிமெண்டரி, சட்ட, நிர்வாகத் துறை ஆங்கிலச் சொற்களுக்கு ஈடான இந்திச் சொற்களைத் தயாரிப்பதற்காக, 33 மக்கள்சபை உறுப்பினர்கள் அடங்கிய குழு ஒன்றை மக்கள்சபைத் தலைவர் அனந்தசயனம் அய்யங்கார், மாநிலங்கள் சபைத் தலைவரின் இசைவுடன் அமைத்திருப்பதாகத் தெரியவருகிறது.

பிரபல, இந்தி, வடநாட்டு ஏகாதிபத்திய வெறியரான புருஷோத்தமதாஸ் தாண்டன் இந்தக் குழுவிற்குத் தலைவராயிருப்பாராம்.

ஏ. எம். தாமஸ், என். பி. தாமோதரன், எஸ் வி. இராமசாமி, வே. இராகவாச்சாரி, என். கேசவ அய்யங்கார், குருபாதசாமி போன்ற தென்னாட்டு உறுப்பினர் சிலரும் அந்தக் குழுவில் இடம் பெறுவராம்.

இந்தக் குழு, முதல் முறையாகக் கூடும் நாளிலிருந்து ஆறு மாதங்களுக்குள்ளாக இந்தி வார்த்தைகளைப் பொறுக்கி எடுத்து அறிக்கை தாக்கல் செய்ய வேண்டுமெனக் கோரப்பட்டிருக்கிறதாம்.

காலஞ்சென்ற சபைத் தலைவரான ஜி. வி. மாவ்லங்கர், மக்கள் சபை அலுவலகத்தில் இந்தி வார்த்தைகளைச் சேகரிப்பதற்கென ஒரு குழு நியமித்திருந்ததாகவும், அந்தக் குழுவினர் 26,000 வார்த்தைகள்வரை சேகரித்திருந்ததாயும், அவற்றுள் இதுவரை 5,000 வார்த்தைகள் பரிசீலிக்கப்பட்டு ஏற்றுக் கொள்ளப்பட்டுவிட்டன என்றும், இப்போது நியமிக்கப்பட்டுள்ள இந்தக் குழு எஞ்சிய 21,000 சொற்களையும் பரிசீலிக்கும் என்றும் கூறப்படுகிறது.

# எல்லாப் பகுதிகளுக்கும் சுதந்திரம் வழங்குவார்களாம்!

## ஆனால், சைப்ரஸ், சிங்கப்பூரை மட்டும் கைவிட மாட்டார்களாம்!

### பிரிட்டிஷாரின் விசித்திர வாதம்

பிரெஸ்டன், மே 9—

"பிரிட்டிஷ் பேரரசின் எல்லாப் பகுதிகளுக்கும் சுதந்திரம் வழங்க பிரிட்டன் தயாராக இருக்கிறது; ஆனால், இராணுவ முக்கியத்துவம் பெற்ற தளங்களைக் கைவிட முடியாது. மத்திய கிழக்கில் சமாதானத்தைப் பாதுகாக்கும் தளம் சைப்ரஸ்; எனவே, சைப்ரசைக் கைவிடும் எண்ணம் பிரிட்டனுக்குக் கிடையாது; சிங்கப்பூரிலும் பிரிட்டன் பலமான தளம் வைத்திருக்க வேண்டியது அவசியமாகும்," என்று, பிரிட்டிஷ் அமைச்சர் ஆர் ஏ. பாட்லர் ஓர் பொதுக்கூட்டத்தில் பேசுகையில் தெரிவித்துள்ளாராம்.

வெள்ளம் அடித்துச் சென்ற

## வெட்டு மரங்கள்

### பாகிஸ்தானிலிருந்து திரும்பப்பெற முயற்சி

புதுடில்லி, மே 8—

வெள்ளமேற்பட்டபோது ஜம்மு—காஷ்மீரிலிருந்து ரூ. 3½ இலட்சம் முதல் ரூ. 4½ இலட்சம் வரை பெறுமானமுள்ள வெட்டு மரங்கள் பாகிஸ்தானிற்குள் அடித்துச் செல்லப்பட்டு விட்டனவென்று உதவி மந்திரி ஜெய்சுக்லால் ஆத்தி, மக்கள் சபையில் தெரிவித்திருக்கிறார்!

தனிப்பட்டவர்களுக்குச் சொந்தமான சுமார் ரூ. 10 இலட்சம் மதிப்புள்ள வெட்டு மரங்கள் பாகிஸ்தானுக்குச் சென்றுவிட்டதாக பஞ்சாப் சர்க்கார் அறிவித்துள்ளதாயும் அந்த மந்திரி தெரிவித்திருக்கிறார்.

இவ்விதம் பாகிஸ்தானிற்குள் வெள்ளத்தினால் அடித்துச் செல்லப்பட்ட மரங்களைத் திரும்பப் பெற இந்தியா — பாகிஸ்தானிடையே ஒரு ஒப்பந்தம் செய்துகொள்ளலாம் என்று இந்திய சர்க்கார் ஒரு யோசனை தெரிவித்திருப்பதாயும் அந்த மந்திரி தெரிவித்திருக்கிறார்.

கிழக்கு பாகிஸ்தானிலிருந்து இடம் பெயர்ந்து வந்துள்ளவர்கள் குடியேறுவதற்கென்றே இந்திய சர்க்கார் 645 காலனிகளை கட்டியுள்ளனர். இக்காலனிகளில் 90 பயிற்சித் திட்டங்களையும், 41 நடுத்தர, சிறு தொழில்களையும், குடிசைத் தொழில்களையும் ஆரம்பிப்பதற்கும் அனுமதி வழங்கப்பட்டிருக்கிறது.

## ஆயுர்வேதத்திற்கு ஆதரவு பெற!

### 4,500 வாக்குகள் பேரம்

புதுடில்லி, மே 8—

"'எங்களிடம் 4,500 வாக்குகள் இருக்கிறது; ஆயுர்வேதத்திற்கு ஆதரவு தருவதானால், அத்தனை வோட்டுகளையும் உங்களுக்கு அளிப்போம்' என்று சில நாட்டு மருத்துவர்கள் என்னிடம் கூறினார்கள். 'அப்படியானால் உங்களின் வாக்குகள் எனக்குத்தேவையில்லை; அவைகளைக் குப்பைத் தொட்டியில் போடுங்கள்' என்று சொல்லி அவர்களை அனுப்பிவிட்டேன்; எனவே, எவரையும் திருப்தி செய்ய முயலாமல், விஞ்ஞான ரீதியில் சிந்தித்துப்பார்க்குமாறு உங்களை கேட்டுக் கொள்கிறேன்" என்று, சுகாதார அமைச்சர் திருமதி ராஜகுமாரி அமிருதகௌரி மக்கள் சபையில், டில்லியில் அ. இ. மருத்துவ விஞ்ஞானக் கழகம் நிறுவுவதற்கான மசோதா மீது நடைபெற்ற விவாதத்திற்குப் பதிலளித்துப் பேசுகையில் குறிப்பிட்டுள்ளார்.

இந்தியாவில் தற்போது 36,000 ஆதாரப் பள்ளிக்கூடங்களும், 2,50 000 சாதாரண ஆரம்பப் பள்ளிக்கூடங்களும் உள்ளன.

# தொழுது அடிமை ஆனோம்! துவண்டோம்!



### இந்தியாவின் முன்னேற்றத்தில் அமெரிக்கா காட்டும் அக்கறை

புதுடில்லி, மே 8—

இந்தியா—அமெரிக்காவுக்கிடையே கையெழுத்தாகியுள்ள மூன்று ஒப்பந்தங்களின்படி இந்தியா முன்னேற்றத் திட்டங்களுக்காக அமெரிக்கா 7,36,682 டாலர் (ரூ. 34,99,000) உதவி அளிக்குமாம்.

### அந்தகர்களுக்கான கடிகாரம்

லண்டன், மே 8—

கண் பார்வை இழந்தவர்களுக்கென தனியாகக் கைக் கடிகாரங்களை ரஷ்ய நிறுவனம் ஒன்று தயாரித்து வருவதாகச் செய்தி ஒன்று கூறுகிறது.

## மாநாட்டு நுழைவுச் சீட்டு

12-5-56-ஆம் நாளிலிருந்து மாநில மாநாட்டு நுழைவுச் சீட்டுகள் கீழ்க்கண்ட இடங்களில் கிடைக்கும் :—

(1) 'வள்ளுவர் நகர்' பந்தயத் திடல், திருச்சி
(2) 9, கிலேதார் தெரு, திருச்சி

★

கட்டண விபரம் :—

நான்கு நாட்களுக்கும் சேர்த்து :

| | | ஆண் | பெண் |
|---|---|---|---|
| 1-ம் பிரிவு | ரூ. | 10-0-0 | 10-0-0 |
| 2-ம் பிரிவு | ,, | 5-0-0 | 2-8-0 |
| 3-ம் பிரிவு | ,, | 3-0-0 | 1-8-0 |

தனித்தனி ஒவ்வொரு நாளும் :

| | | ஆண் | பெண் |
|---|---|---|---|
| 1-ம் பிரிவு | ரூ. | 3-0-0 | 8- 0-0 |
| 2-ம் பிரிவு | ,, | 1-8-0 | 0-12-0 |
| 3-ம் பிரிவு | ,, | 1-0-0 | 0- 8-0 |

### துறைமுக முன்னேற்ற வேலைகளுக்காக நிதி

புதுடில்லி, மே 8—

பம்பாய், கல்கத்தா, சென்னை துறைமுக முன்னேற்ற வேலைகளுக்காக இந்திய போக்கு-வரத்து இலாகா ரூ. 43,40,000 அனுமதியளித்திருக்கிறதெனத் தெரிகிறது.

சென்னை துறைமுகத்தில், இரட்டைமாடி கொண்ட கிடங்கு ஒன்று ரூ. 11,40,000 செலவில் அமைக்கப்படுமாம்.

### டில்லி ... இந்தி மொழிப் பயிற்சி...

சென்னை, மே ...

மத்திய சர்க்கார் அதிகா... ளுக்கு (4-வது பிரிவு தவிர்... இந்தியில் பயிற்சிதர உள்... இலாகா வகுத்துள்ள தி... சென்னையில் அமுல் நடத்... கிறது. 20 'சென்டர்'களில் ... 900 மத்திய அரசினர் அதி... களும், சிப்பந்திகளும் ... வகுப்புகளுக்குச் செல்கிறார்க...

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

# தி. மு. கழக மத்திய செயற்குழுக் கூட்டம்

★

திராவிட முன்னேற்றக் கழக, மத்திய செயற் குழுக் கூட்டம், (Working Committee) திருச்சி 'வள்ளுவர் நகரி'லுள்ள தற்காலிகத் தலைமை நிலையத்தில், 16-5-56 புதன் காலை 8·30 மணிமுதல் 9-30 மணிவரை நடைபெறும்.

—தலைமைக் கழகம்.

தலைமை நிலையச் செய்தி :

# கழகக் கொடி ஏற்றுவீர்!

13—5—56-ஆம் நாள் மேற்கொள்ளும் மாநில மாநாட்டு விளம்பர நாளை ஒட்டி, ஊர்வலம் நடத்துதல், துண்டு அறிக்கை வெளியிடுதல், சுவரொட்டி விளம்பரம் செய்தல் ஆகியவற்றோடு பழைய கழகக் கொடியைப் புதுப்பித்தல், புதுக்கொடி ஏற்றுதல் ஆகிய பணிகளையும் கழகத் தோழர்கள் மேற்கொள்வார்களாக!

'அறிவகம்'
சென்னை - 13
10—5—'56

தி. மு. கழகம்
தலைமை நிலையம்

★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★★

இலங்கையில் பிரிட்டிஷ்

## இராணுவத்தளம்

### பண்டாரநாயகா தம் கருத்தை வலியுறுத்துகிறார்

கொழும்பு, மே 9—

"இலங்கையில், பிரிட்டனின் இராணுவத் தளங்கள் நீடித்திருப்பது, உலகப்போக்கு குறித்தும், அதில் இலங்கை வகிக்கும் அங்கம் பற்றியும் நான் கொண்டுள்ள அடிப்படைக் கருத்துக்கே முரணாக இருக்கிறது.

"இப்பிரச்சினை மீது எனது கருத்தை மாற்றிக் கொள்ளும் எண்ணம் எனக்கு ஒருபோதும் இல்லை. எந்த நிர்ப்பந்தமும் இதை மாற்ற முடியாது" என்று, இலங்கை முதலமைச்சர் பண்டாரநாயகா பத்திரிகையாளர்கள் மாநாட்டில் தெரிவிக்கிறார்.

### ஆசிரியர் சம்பள உயர்வு

#### பகுதிச் செலவை டில்லி ஏற்கும்

புதுடில்லி, மே 8—

அரசினர் விதித்துள்ள அடிப்படை விகிதத்தில் ஆரம்பப்பள்ளி ஆசிரியர்கள் ஊதியத்தை உயர்த்துவதில் மாநில சர்க்கார்களுக்கு ஏற்படும் அதிகப்படி செலவில் பாதியை இந்தியப் பேரரசினர் ஏற்றுக் கொள்வார்களாம்.

இச்செய்தி மாநில சர்க்கார்களுக்கு தெரிவிக்கப்பட்டுள்ளதென்றும், இது தற்காலிகமானதென்றும், அடுத்த நிதிவிசாரணைக்குழு நியமிக்கப்படும்வரை இது அளிக்கப்படுமென்றும் தெரியவருகிறது.

★★★★★★★★★★★★★★★★★

மாநில மாநாடு :

## தலைமை நிலையம்—முகவரி மாற்றம்

மாநில மாநாட்டினையொட்டி தி. மு. கழகத் தலைமை நிலையம் [தற்காலிகமாக] 6—5—56 முதல் 27—5—56 வரை கீழ்க்கண்ட முகவரிக்கு மாற்றப்பட்டிருக்கிறது.

முகவரி :

தி. மு. கழகத் தலைமை நிலையம்,
'வள்ளுவர் நகர்',
தி.மு.க. மாநில மாநாடு அஞ்சல்,
திருச்சி

போன் எண் :

மாநாட்டுப் பந்தல் : 666
தலைமை நிலையம் : 676

—தலைமை நிலையம்

# மாநில மாநாட்டில்!

★

## சிறப்புத் தலைப்புகள் மீதும், தீர்மானங்கள் மீதும்

### பேசுவோர் :

★

## அண்ணா

என். வி. நடராசன்
கே. ஏ. மதியழகன்
சி. பி. சிற்றரசு
என். எஸ். இளங்கோ
சத்தியவாணிமுத்து
ப. உ. சண்முகம்
அருண்மொழி
இரா. சு. தங்கப்பழம்
கே. கே. நீலமேகம்
பி. ஆர். கோகுலகிருஷ்ணன்
பூங்கோதை
மணிமொழியார்
வாணிதாசன்
க. அறிவழகன்
ஈழத்தடிகள்
டி. வி. நாராயணசாமி
கே. கோவிந்தசாமி
ஜி. பராங்குசம்
எஸ். வி. லிங்கம்
பி. என். இராமானுசம்
க. நெடுஞ்சோழன்
சி. வி. எம். அண்ணாமலை
முல்லை சத்தி
ஆர். பாலகுருசாமி
வி. சிவப்பிரகாசம்
இரா. சாம்பசிவம்
இ.ல.மா. சவுந்திரபாண்டியன்
வி. எம். ஜான்
கே. டி. எஸ். மணி
கருத்தோவியன்
தா. ஆவுடையப்பன்
சி. ஆர். பாலசுந்தரம்
இலங்கை-அதிமணி
சா. அமீது
சமதர்மம்
இராம. சுப்பையா
முல்லை வடிவேலு
வி. டி. அண்ணாமலை
டாக்டர் அருணாசலம்
வன்னியபெருமாள்
சிவசண்முகசுந்தரம்
து. உ. இராமநாதன்
ஒளியழகன்
திருச்சி-நெடுமாறன்

ஈ. வெ. கி. சம்பத்
க. அன்பழகன்
டி. கே. சீனிவாசன்
கி. மனோகரன்
தில்லை-வில்லாளன்
எம். எஸ். இராமசாமி
ஏ. கோவிந்தசாமி
எம். பி. சுப்பிரமணியம்
கே. வி. கே. சாமி
டி. கே. பொன்னுவேலு
பொற்செல்வி
எஸ். அப்பாவு
சுரதா
எஸ். எஸ். தென்னரசு
வி. ஜி. இராசையா
வி. எஸ். கோவிந்தராசன்
சி. டி. தண்டபாணி
ஏ. கே. வில்வம்
ஜெபக்கனி
டி. சண்முகம்
எஸ். வேதரத்தினம்
ஏ. எல். சி. கிருஷ்ணசாமி
இளம்பரிதி
வி. முனுசாமி
குடவாசல்-கிருஷ்ணமூர்த்தி
பொன். சொக்கலிங்கம்
கே. எஸ். சந்தானம்
டி. பி. அழகமுத்து
வி. சின்னத்தம்பி
சி. முனுசாமி
ப. இராமலிங்கம்
தாண்டவன்
பம்பாய்-தியாகராசன்
உ. பில்லப்பன்
மா. தங்கவேலர்
டபிள்யூ. கே. துரைசாமி
எஸ். கந்தசாமி
வகாப்
ஏர்வாடி அப்துல்காதர்
எஸ். எஸ். பி. லிங்கம்
என். கிட்டப்பா
குன்றத்தூர் சம்பந்தம்
கலையழகன்
ஏ. தம்புசாமி

மு. கருணாநிதி
கண்ணதாசன்
ஏ. வி. பி. ஆசைத்தம்பி
காஞ்சி—கல்யாணசுந்தரம்
கா. அப்பாதுரையார்
அரங்கண்ணல்
அ. பொன்னம்பலனார்
ஆர். எஸ். பாண்டியன்
அலமேலு அப்பாதுரை
அலிசேக்மன்சூர்
ப. கண்ணன்
கோவை-செழியன்
எம். எஸ். சிவசாமி
மாறன்
இளமுருகு
பெருமாள்
கே. ஏ. கிருஷ்ணசாமி
ஈ. ஆர். கிருஷ்ணன்
சி. வி. இராசகோபால்
தமிழரசு
சிற்றுளி-சுப்பிரமணியம்
போளூர்-சுப்பிரமணியம்
கே. எம். கண்ணபிரான்
ஏ. கே. சாமி
ச. சிவப்பிரகாசம்
எஸ். ஏ. ராசமாணிக்கம்
வி. சண்முகநாதன்
பெங்களூர் எஸ். வி. பதி
ப. நாராயணன்
குளித்தலை-முத்துகிருஷ்ணன்
தூத்துக்குடி-நடராசன்
குப்புசாமி
டி. எம். பார்த்தசாரதி
பு. இராமசாமி
சாமி பழனியப்பன்
சித்தூர்-பார்த்தசாரதி
திருப்பத்தூர்-நடேசன்
நாகசுந்தரம்
கோடீஸ்வரராவ்
மேத்தா
அடைக்கலம்
டி. ஆர். சுப்பிரமணியம்
சிறுமி பானுமதி

## 'நேட்டோ'வில் அங்கம் வகிக்கும் நாடுகளுக்கு!

### அமெரிக்கா அணு ஆயுதங்கள் வழங்குமாம்

வாஷிங்டன், மே 7—

வடஅட்லாண்டிக் பாதுகாப்பு ஒப்பந்தத்தில் (நேட்டோ) அமெரிக்காவுடன் கூட்டுச்சேர்ந்துள்ள நாடுகளுக்கு அணு ஆயுதங்களை வழங்க தாம் உத்தேசித்திருப்பதாக அமெரிக்கக் குடியரசுத் தலைவர் ஐசனோவர், அமெரிக்க காங்கிரசிற்குத் தெரிவித்திருக்கிறாராம்.

மேலும், அமெரிக்கா தனது இராணுவத்தை, அணு ஆயுதங்களைக் கொண்டு மேலும் பலப்படுத்தி வருவதாயும் காங்கிரசிற்குத் தெரிவிக்கப்பட்டிருக்கிறதாம்.

### மீனவருக்கு 'நைலான்' வலைகள் கிடைக்குமாம்!

#### நான்கு திங்களில் தொகையை சர்க்கார் வசூலித்துக் கொள்ளும்?

சென்னை, மே 7—

இந்தியப் படகுகளை உபயோகிக்கும் மீனவருக்கு 260 'நைலான்' வலைகள் வாங்கி விற்கும் திட்டத்தை 2-வது ஐந்தாண்டுத் திட்டத்தின் முதலாண்டில் நிறைவேற்ற சர்க்கார் அனுமதியளித்திருக்கின்றதாகத் தெரிகிறது.

வலைகள் வாங்கிய விலையில் மூன்றிலோர் பங்கு குறைத்து மீனவருக்கு விற்கப்படுமாம். வலையின் விலை முதல் மூன்று திங்களில் திங்கள் ஒன்றுக்கு ரூ. 150 வீதமும் மீதத் தொகை 4-வது திங்களிலும் வசூலிக்கப்படுமாம்.

★★★★★★★★★★★★★★★★★

## மாநில மாநாடு

### அழகிரி உணவு விடுதி

மாநில மாநாட்டிற்கு வருகை தரும் பொதுமக்களுக்கு மிகவும் வசதியாகவும், நேர்த்தியாகவும் உணவு அளிக்கும் ஏற்பாட்டினை ராபி குழுவினர் மேற்கொண்டுள்ளனர்.

மாநாட்டுப் பந்தலையடுத்து இந்த உணவு விடுதி அமைக்கப்பட்டிருக்கிறது.

மாநாட்டிற்கு வருகைதரும் பொதுமக்கள் அழகிரி உணவு விடுதியில் ருசியான உணவினை மேற்கொள்ளலாம்.

# இழி நிலை நீக்க, முழு ஒளி காண எழுவோம்!

...நாடு...

(முதல் பக்கத் தொடர்ச்சி)

...ள்ளனர்.

...சமதர்மம் வந்து ...நாட்டுப் பணிகள் செய்து ...ண்டுள்ளார்.

...செயலாளர் இரா. ...நெடுஞ்செழியன் நேற்று ...னைக்கு சென்றுள்ளார். ...மறுதினம் திருச்சி வரு...

...ப் பொதுச்செயலாளர் ...வி. நடராசன், தலைமை நிலையத்திலிருந்து பொறுப்பு ...களைப் பார்த்து வருகிறார்.

பந்தலில் ஒலி, ஒளி வேலைகள் துவக்கியாகி விட்டது. ராபி குழுவினர் மிக மும்முரமாக வேலையில் இறங்கியுள்ளனர்.

ஊர்வலம் சிந்தாமணியிலிருந்து புறப்பட்டு, மாநாட்டுப் பந்தலை அடையும். அவ்வழிகளிலெல்லாம் அலங்கார வளைவுகளும், பிற ஏற்பாடுகளும் துரிதமாக நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. ஊர்வலத்தின் முன் இரண்டு யானைகள் வர ஏற்பாடாகியிருக்கிறது.

மாநாட்டுக்கு வருகை தரும் பொதுமக்களின் வசதிக்கேற்ப உணவு அளிக்கும் ஏற்பாடுகளை ராபி குழுவினர் செய்து வருகின்றனர்.

உணவு விடுதிப் பந்தல் அமைத்தாகிவிட்டது; ஒரே நேரத்தில் மூவாயிரம் பேர் அமர்ந்து சாப்பிட வசதி செய்யப்பட்டுள்ளது. நான்கு நாட்களுக்கும் மூன்று வேளை டிபன், உணவு ரூ 5; ஒரு நாளைக்கு மூன்று வேளை டிபன், உணவு ரூ. 1—6—0.

வரவேற்புக் குழுவினர் எல்லா ஏற்பாடுகளையும் நிறம்படச் செய்து வருகின்றனர்.

மாநில மாநாடு, மாபெரும்பாசறையாகக் காட்சியளிக்கிறது.

16—5—56 புதன் காலை 8-30 மணி முதல் 9-30 மணி வரை மத்திய செயற்குழுக் கூட்டம் (Working - Committee) வள்ளுவர் நகரிலுள்ள தற்காலிகத் தலைமை நிலையத்தில் நடைபெறும்.

அன்று காலை 10 மணிக்கு வள்ளுவர் நகரிலுள்ள பொதுக் குழு விடுதியில், பொதுக் குழு உறுப்பினர் கூட்டம் (General - Council) துவங்கப்பெறும்.

அன்று மாலை, மாநில மாநாட்டுத் தலைவருக்கு, திருச்சி நகர சபையில், நகர சபை சார்பில் வரவேற்பு இதழ் வாசித்தளிக்கப்படும்.

தி. மு. கழக—மாணவர் கிளையின் பொதுக் குழு கூட்டமும் அன்று மாலை வள்ளுவர் நகரில் நடைபெறும்.

16—5—56 காலை 6 மணிக்கு, திருச்சி பெரிய இரயில்வே நிலையத்தில், மாநாட்டுத் தலைவர், திறப்பாளர் முதலானவர்களுக்கு வரவேற்பு அளிக்கப்படும்.

---

## வயிறு வலிக்காமல்...

(1-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

அப்துல் பாசல் எய்னிபூர் என்பார், கடந்த வாரம், தனக்கு வயிற்று வலி என்று கூறினார்: டாக்டர்கள் பரிசோதித்துப் பார்த்து ஏதோ அடிப்படையில் கோளாறு என்று கண்டனர்; ஆனால், அவர்களுக்கே தெரியாதாம், ஆபரேஷன் செய்யுமுன், இத்தனை பொருட்களை அந்த மனிதர் விழுங்கி வைத்திருப்பார் என்று!

சிகிச்சை முடிந்த பிறகு எய்னிபூர் கூறினாராம்—தான் கடந்த 19 ஆண்டுகளாகத் தந்திரங்கள் செய்யப் பழகிவருவதாகவும், அந்தக் காலத்தில் இவற்றையெல்லாம் உட்கொண்டதாகவும்!

---

மாநில மாநாட்டுக்குச் செல்லும்

## மதுரை மாவட்ட தி. மு. கழகத் தோழர்களுக்கு:

“மதுரை இரயில்வே சந்திப்பிலிருந்து 16-ந்தேதி மாலை திருச்சி செல்லும் திருவனந்தபுரம், திருநெல்வேலி துரிதவண்டிகளிலும் இரவு 11 மணியளவில் செல்லும் ‡செங்கோட்டை பாசஞ்சர் வண்டியிலும் மாநில மாநாட்டிற்குச் செல்லுவதற்காக அதிகப்படியான ‘பெட்டிகள்’ சேர்ப்பதற்கு செய்யப்பட்டிருப்பதால், அவ்வண்டிகளில் செல்ல விரும்பும் தோழர்கள் உடனடியாக ‘மதுரை நகர் தி. கழகம், 4, கட்ருபாளையம்’ என்ற முகவரிக்கு தகவல் தெரிவிக்கும்படி கேட்டுக்கொள்கிறோம்.

---

## ‘தீச்சுடர்’

வளர்ச்சிக்காக சிறப்புச் சொற்பொழிவு

13—5—56 மாலை 5 மணியளவில், பெங்களூர் தி. மு. க. மாவட்டச் சார்பில், சர். புட்டண்ணா செட்டி டவுன் ஹாலில், தோழர் மா. மன்னர் தலைமையில், சிறப்புச் சொற்பொழிவுக் கூட்டம் நடைபெறும்.

தோழர்கள் சி. பி. சிற்றரசு, எஸ். எஸ். இராசேந்திரன் பேசுவர்.

தோழியர் ஜி. கஸ்தூரி குழுவினர் இன்னிசை விருந்தளிப்பர்.

கட்டணம்: 0-15-9; 0-8-0.

---

வடசென்னை தாளமுத்து—நடராசன் முன்னேற்ற மன்றம்

13—5—56 காலை 8 மணியளவில் மன்றப் பணிமனையில், மாநில மாநாடு பிரச்சாரக் கூட்டம் நடைபெறும். அதுபோது, தாளமுத்து—நடராசன் கல்லறைப் படமும், அண்ணா படத் திறப்பு விழாவும் நடைபெறும். தோழர்கள் தென்னரசு, வில்வம் பேசுவர்.

---

## திருத்துறைப்பூண்டி வட்ட தோழர்களுக்கு:

“வேதாரணியம் – திருத்துறைப்பூண்டி, வேதாரணியம்-முத்துப்பேட்டை இடையிலுள்ள கிளைக்கழகத் தோழர்கள் திருத்துறைப்பூண்டி ஜங்ஷன்வந்து திருவாரூர் மார்க்கமாக மாநில மாநாட்டிற்குச் செல்லும் வழியில் திருத்துறைப்பூண்டி இரயில் நிலையத்தில் உணவுப் பொட்டலங்கள் 16-ந் தேதி இரவு கொடுக்கப்படும். கிளைக் கழகங்கள் தங்கள் ஊரிலிருந்து எத்தனைபேர் வருகிறார்கள என்பதை 15-ந் தேதிக்குள் தெரிவிக்கவும்”

என்று, பொதுக் குழு உறுப்பினர் வை. சுப்பிரமணியம் அறிவிக்கிறார்.

---

## தமிழ் நாட்டில் விநோபா பாவே சுற்றுப்பயணம்

நிலக்கொடை இயக்கத்திற்காக ஆச்சாரியா விநோபா பாவே அவர்கள், தமிழ் நாட்டில் மேற்கொண்டுள்ள சுற்றுப் பயணத்தில் 13-5-56 முதல் 26-5-56 வரையுள்ள நிகழ்ச்சிகள் கீழே தரப்படுகிறது:—

மே 13: திருவள்ளூர்; 14: வேப்பம்பட்டு; 15: ஆவடி; 16: அம்பத்தூர்; 17: அயனாவரம் (சென்னை); 18: மவுண்ட்ரோடு (சென்னை); 19: தியாகராயநகர் (சென்னை); 20: மௌலிவாக்கம்; 21: பழஞ்சூர்; 22: ஸ்ரீ பெரும்புதூர்; 23: மொளச்சூர்; 24: தென்னேரி; 25: ராஜம்பேட்டை; 26: காஞ்சீபுரம்.

---

## கழகக் கூட்டம்

★

**கோலார்—தங்கவயல்:**
13—5—56 மாலை 6 மணிக்கு
தலைவர்:
சே. ஜி. சின்னசாமி
பேசுபவர்:
ஏ. எல். சி. கிருட்ணசாமி

★

**கடமங்குடி:**
வள்ளுவர் மன்றம்
13—5—56 மாலை 6 மணிக்கு
தலைவர்:
ம. கூலவாணிகன் சாத்தன்
பேசுவோர்:
க. அறிவழகன்
ம. பொ. தருமன்
சா. இராசலிங்கன்

★

**செந்தாரப்பட்டி:**
தெற்கு சத்திர வீதியில்
தி. மு. கழகந் துவக்க விழா
13—5—56 மாலை 6 மணிக்கு
தலைவர்:
க. மருதமுத்து
பேசுவோர்:
அருண்மொழி
சிற்றுளி-சுப்ரமணியம்
ஏ. கே. வில்வம்

---

### திருமணம்

13—5—56 மாலை 6 மணியளவில், செலாலிப்பாறையில், தோழர் க. நெடுஞ்செழியன் தலைமையில் தோழர் ஈ. பாலரசு—தோழியர் செல்லம் திருமணம் நடைபெறும். தோழர்கள் ஆ க வேலவன், தா. க. அருணாசலம், ப. தாமரைச்செல்வன், இராயப்பன் வாழ்த்துரை வழங்குவர்.

---

### சொற்பயிற்சிக் கூட்டம்

வடசென்னை குறள்நெறிக் கழகச் சொற்பயிற்சிக் கூட்டம் 12—5—56 மாலை 6-30 மணியளவில் தோழர் ம. முகம்மது அலி தலைமையில் நடைபெறும். ‘குறளோவியம்’ என்ற பொருள் குறித்துத் தோழர்கள் பலர் பேசுவர்.

---

### திருக்குறள் வகுப்பு

சென்னை — பெத்துநாய்க்கன் பேட்டை தாய்மார் கழகச் சார்பில், 12—5—56 பிற்பகல் 2½ மணிக்கு மேல், சென்னை—முதலுக்கிருஷ்ணன் தெரு; 15-ம் எண்ணுள்ள இல்லத்தில் திருக்குறள் வகுப்பு நடைபெறும். மயிலை-சிவ. முத்து அவர்கள், ‘ஒற்றுடல்’ என்பது குறித்து விரிவுரையாற்றுவார்.

* * *

சென்னை—இராயபுரம் இலக்கிய மன்றச் சார்பில், பனைமரத் தொட்டி சிவசுப்பிரமணியசுவாமி கோயில் மண்டபத்தில், 12-5-56 இரவு 7 மணிக்கு திரு. அ. ஞானசுந்தரம் ‘திருக்குறள் வகுப்பு’ நடத்துவார்.

---

### டாக்டர் அம்பேத்கார் பிறந்த நாள் விழா

12—5—56 மாலை 6 மணிக்கு, அரக்கோணம் மார்க்கெட் எதிர் மைதானத்தில், திரு. ஜெ பால் தலைமையில், மேற்படி விழா நடைபெறும். தோழர்கள் என். வி. நடராசன், எ இரத்தினம் எம் எல்.ஏ., சு. வெ. ராமையா பேசுவர்.

---

### ஆரிய இனவெறியே......

(முதல் பக்கத் தொடர்ச்சி)

தரும் ஊற்றுக்கோலாக அமைகிறது.”

பண்டித பாலகிருஷ்ண சர்மா பேசும்பொழுது குறிப்பிட்டதாவது:—

“எந்த ஒரு நாட்டின் அரசியல் ஒருமைப்பாட்டிற்கும் உணர்வு வழி இணைப்பு, முன்னேற்பாடாக அமைந்திருக்க வேண்டுவது முக்கியமாகும். இவ்வகையில் இந்தியாவின் சில பகுதிகளில நிலவிவரும் நிலைமை திருப்தி தருவதற்கு மாறாக இருந்துவருகிறது.”

---

# மாநில மாநாட்டு விளம்பர நாள்

## 13—5—56 நிகழ்ச்சிகள்:

தி. மு. கழகத்தின் நகரக் கிளைகளும்—சிற்றூர்—பேரூர்க் கிளைகளும் 13—5—56-ம் நாளை மாநில மாநாட்டு விளம்பர நாளாகக் கொள்ள வேண்டுமெனும் பொதுச்செயலாளரின் வேண்டுகோளுக்கேற்ப, பல பகுதிகளில் நடைபெறவிருக்கும் நிகழ்ச்சிகள் இங்கு தரப்படுகிறது.

ஊர்வலங்களில் பெரும் அளவில் பங்கேற்குமாறு, நகர—வட்ட கிளைக் கழகச் செயலாளர்களால், கழகத் தோழர்கள் கோரப்பட்டுள்ளனர்.

### மதுரை:

மாலை 4—மணிக்கு நாடார் வித்தியாசாலைத் தெரு, தாளமுத்து-நடராசன் நினைவுப் படிப்பகத்திலிருந்து ஓர் மாபெரும் சைக்கிள் ஊர்வலம் மதுரை நகரின் முக்கிய வீதிகள் வழியாக வந்து நகர் கழகம் வந்து அடையும்.

### சேலம்;

காலை 9-30மணிக்கு செவ்வாய்ப்பேட்டை இராஜேந்திரா சத்திரத்திலிருந்து மாபெரும் சைக்கிள் ஊர்வலம் புறப்பட்டு நகரின் பல முக்கிய தெருக்களின் வழியாகச் சென்று ‘வி’ மார்க்கெட் வந்து சேரும்,

### குணியமுத்தூர்:

தோழர் சி. அய்யாசாமி தலைமையில் கழகப் பணிமனையிலிருந்து சைக்கிள் ஊர்வலம் புறப்பட்டுச் சுண்டக்காமுத்தூர், பேரூர், போத்தனூர், சுந்தராபுரம், மாச்சம்பாளையம், இடையபாளையம் வழியாகச் செல்லும்.

### திருப்பூர்:

மாலை 4-40 மணிக்கு வாலிபாளையம் தொழிலாளர் பகுத்தறிவுப் படிப்பகத்திலிருந்து ஒரு மாபெரும் சைக்கிள் ஊர்வலம் துவங்கி, நகரின் எல்லாப் பகுதிகளுக்கும் செல்லும். ஊர்வலத்தைத் தோழர் கே. எஸ். மணி தலைமை தாங்கி நடத்திவைப்பார்.

### சென்னை 1-வது வட்டம்:

பிற்பகல் 2-மணியளவில், திருவொற்றியூர் தி. மு. கழகக் கட்டிடத்திலிருந்து செயலாளர் ல. கண்ணன் தலைமையில் ஊர்வலம் புறப்பட்டு, மேற்படி வட்டத்தின் எல்லாப் பகுதிகளுக்கும் செல்லும்.

### சென்னை 18-வது வட்டம்:

தி மு. கழகச் சார்பில், வட்டம் முழுமையிலும் மாநாட்டு விளம்பரம் செய்ய ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளது; தோழர்கள் கலந்துகொள்ளுமாறு கோரப்படுகிறார்கள்.

### சென்னை 37, 43-வது வட்டம்:

மாலை 3 மணிக்கு, 37, 43-வது வட்ட தி. மு. கழகக் கிளைகளின் சார்பில் ஓர் சைக்கிள் ஊர்வலம் 43-வது வட்ட தி. மு. கழகத்திலிருந்து புறப்பட்டு, இரு வட்டங்களின் முக்கிய வீதிகளிலும் செல்லும்.

---

## தென்னாற்காடு மாவட்ட தி. மு. க. தோழர்கட்கு

வேண்டுகோள்

“திருச்சியில் நடைபெறும் தி. மு. கழக இரண்டாவது மாநில மாநாட்டில் நமது மாவட்டத் தோழர்கள் பெருவாரியாகக் கலந்துகொண்டு, தெ. ஆ மாவட்டத்திற்கு நற்பெயரைப் பெற்றுத்தருமாறு பெரிதும் விழைகிறேன்; எனவே, மாநாட்டிற்கு வருகை தரவிருக்கும் நமது மாவட்டத் தோழர்கள் கீழ்க்கண்ட விதிகளை மேற்கொள்ள வேண்டுகிறேன்:—

1. மாநாட்டுப் பிரதிநிதிகளை இதுவரை தேர்ந்தெடுக்காத கிளைகள் உடனடியாகத் தேர்ந்தெடுத்து, பணத்துடன் மாநாட்டு அலுவலகத்திற்கு அனுப்பிவைக்க வேண்டும்
2. தெ ஆ மாவட்டத்திலிருந்து செல்லும் தி. மு. கழகத் தோழர்கள் மே திங்கள் 16-ம் நாள் மாலையில் திருச்சியில் இருப்பதற்கேற்றவாறு தங்களின் பயணத்தைத் துவங்க வேண்டுமென்று வேண்டுகிறேன்; இம்முறையினால், நம மாவட்டம் 17-ம் நாள் ஊர்வலத்தில் கலந்துகொள்ள வசதி ஏற்படுகிறது.
3. ஒவ்வொரு கிளையும் தலைமை நிலையம் தெரிவித்துள்ள அளவுள்ள கொடியில ஊரின் பெயரைப் பொறித்துக்கொண்டு எடுத்துவர வேண்டும்.
4. சைக்கிள் மூலமாகச் செல்லும் தோழர்கள் தங்களின் முகவரியை எனக்கும், மாநாட்டு அலுவலகத்திற்கும் தெரிவிக்க வேண்டும்.
5. மாநில மாநாட்டு விளம்பரக் குழுவினரால் அனுப்பிவைக்கப்பெறும் ‘போஸ்டர்’களை உடனுக்குடன் தகுந்த இடத்தில் ஒட்டியும், பெரிய தட்டிகளில் எழுதி ஆங்காங்கே வைப்பதும் சிறந்தது.
6. விளம்பரக் குழுவினரால் அனுப்பப்பெறும் துண்டு விளம்பரங்கள்போல் எல்லாக் கிளைக் கழகங்களும் பெரும் அளவு மாநாட்டு விளம்பரங்களையும், நிகழ்ச்சிகளையும் அச்சடித்து பொதுமக்கள் அறியும்படி வழங்க வேண்டும். மற்றும், பொதுச்செயலாளர் அவர்களாலும், வரவேற்புக் குழுவினராலும் நிறைவேற்ற வேண்டிக் கொள்ளும் வேண்டுகோள்களை உடனுக்குடன் நிறைவேற்றுதல் வேண்டும்.
7. பொதுச்செயலாளரின் அறிக்கைக்கிணங்க, 13—5—56 நாளினை மாநாட்டு விளம்பர நாளாகக்கொண்டு தக்க முறையில் பணியாற்றுமாறு வேண்டிக்கொள்கிறேன்,”

என்று, தென்னாற்காடு மாவட்டச் செயலாளர் தோழர் இரா. சாம்பசிவம் அறிவிக்கிறார்.

---

### தூத்துக்குடி - நடராசன் சுற்றுப்பயணம்

மே 12: வார்டுகூட்டம்
13: களக்காடு
14: ஆழ்வார்குளம்
15: குறிச்சி
16: திருச்சி

---

### சூளை நகர இளைஞர் கழகம்

13-5-56 காலை 8-30 மணிக்கு சுகாதார ஊர்வலம் ஒன்று குமாரசாமி ராஜபுரத்திற்குச் சென்று சுகாதாரப் பணியாற்றும். அவ்வமயம் இலவச பால் வினியோகம் நடைபெறும். காலை 10 மணிக்கு ‘சேரியில் நமது பணி’ எனும் பொருள் பற்றி திரு கே. வி. ஸ்ரீதரன் கழக மனையில் சொற்பொழிவாற்றுவார்.

---

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம் ஏ. அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24 சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம். சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம். ஏ.

# குழுமுவோம் திருச்சியில் குவலயம் வியக்க!

